ஸ்ரீ:

# ஸ்ரீ [illegible] ஸ்தோத்ரங்கள்

வெளியிடுவோர்:

ஸ்ரீவிசிஷ்டாத்வைத ப்ரசாரிணீ ஸபா

ஸ்ரீதேசிக வித்யாபவனம்

27, வெங்கடேச அக்ரஹாரம், மயிலாப்பூர்,

சென்னை - 600 004

மூன்றாம் பதிப்பு - 2012

ஸ்ரீ:

# ஸ்ரீ ந்ருஸிம்ஹ ஸ்தோத்ரங்கள்

(வேதங்கள், இதிஹாஸ புராணங்கள், ஆழ்வார்களின் அருளிச்செயல்கள் பூர்வாசார்ய ஸ்தோத்ரங்களிலிருந்து ஸ்ரீலக்ஷ்மீந்ருஸிம்ஹனைப் பற்றிய துதிகளின் தொகுப்பு)

தொகுப்பாசிரியர்

ஸ்ரீ உ. வே. வித்வான் பையம்பாடி, சேட்டலூர்

**வா. ஸ்ரீவத்ஸாங்காசார்ய ஸ்வாமி**

(பேராசிரியர், சென்னை ஸம்ஸ்க்ருதக் கல்லூரி, மயிலை, சென்னை-4)

வெளியிடுவோர்:

**ஸ்ரீவிசிஷ்டாத்வைத ப்ரசாரிணீ ஸபா**

ஸ்ரீதேசிக வித்யாபவனம்

27, வெங்கடேச அக்ரஹாரம், மயிலாப்பூர், சென்னை - 600 004

மூன்றாவது பதிப்பு 2012

 **[Price Rs.100/-**

ஸ்ரீ:

# முகவுரை

வெகு நாட்களாக பல ஆஸ்திகர்கள் ஸ்ரீலக்ஷ்மீந்ருஸிம்ஹன், ஸ்ரீஸுதர்சனுழ்வார் ஸ்தோத்ரங்களை தொகுத்து தேவநாகரி லிபியிலும் (இப்பொழுது கிடைப்பதில்லை) அச்சிட்டால் பாராயணம் அர்ச்சனை முதலியவைகளுக்கு உபயோகப்படும் என்று கேட்டுக் கொண்டிருந்தார்கள். ஆகையால் முதன்முதலாக ஸ்ரீலக்ஷ்மீந்ருஸிம்ஹன் ஸ்தோத்ரத்தை வெளியிடுகிறோம். அநேக பாட பேதங்களும் இருப்பதால் ப்ராசீனக்ரந்தங்களிலிருந்து பரிசீலனை பண்ண வேண்டியிருப்பதால் நம் சபையில் பப்ளிகேஷன் கமிட்டியில் மெம்பரும், சென்னை மைலாப்பூர் ஸம்ஸ்க்ருத கலாசாலையில் உபதலைவருமான வித்வான் ஸ்ரீ உ. வே. சு. மையம்பாடி சேட்டலூர் வா. ஸ்ரீவத்ஸாங்காசார்யர் ஸ்வாமியை இந்த க்ரந்தத்தை தொகுத்து கொடுக்கும்படி பிரார்த்தித்தோம். எங்கள் வேண்டுகோளுக்கு இணங்கி, கலாசாலை வேலையுடனும், மற்றும் தேசிக பவனத்திலும் மற்ற இடங்களிலும் சாஸ்த்ர ப்ரவசனுதிகளில் ஈடுபடுவதின் ச்ரமத்தையும் பாராமல் இந்த க்ரந்தத்தை வெளியிட உதவியதற்கு அந்த ஸ்வாமிக்கு ஸபையாரின் மனமார்ந்த க்ருதஜ்ஞதையை தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

**ஸ்ரீ விசிஷ்டாத்வைத ப்ரசாரிணீ ஸபை**

ஸ்ரீ:

## விஷய ஸூசிகை

---

ஸ்ரீ:

ஸ்ரீமதே லக்ஷ்மீ ந்ருஸிம்ஹ பரப்ரஹ்மணே நம:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீமதே நிகமாந்த மஹாகுரவே நம:

# முன்னுரை

ஸ்ரீ லக்ஷ்மீந்ருஸிம்ஹனைப் பற்றி வேதங்களிலும், ஸ்ரீமத் ராமாயணம், ஸ்ரீபாரதம், இதிஹாஸ புராணங்கள், ஸ்ரீபாஞ்சராத்ர ஆகமங்கள், ஆழ்வார்களின் அருளிச் செயல்கள், பூர்வாசார்ய ஸ்தோத்ரங்கள், மந்த்ர சாஸ்த்ரங்களில் தெரிவித்தவற்றில் ஒரு சில முக்கியமான விஷயங்கள் - இவைகளைத் தொகுத்து வெளியிட வேண்டும் என்று ஸ்ரீ விசிஷ்டாத்வைத ப்ரசாரிணீ ஸபாவின் நெடுநாளைய நோக்கம் இப்போது ஈடேறுகிறது.

ஸ்ரீ ந்ருஸிம்ஹ ஜயந்தி முதலான விசேஷ நாட்களிலும், ஆதி - வ்யாதிகளால் தொல்லைபடும் போதும், பொதுவாகவே பல நன்மைகளைக் கருதியும் ஸ்ரீந்ருஸிம்ஹனைப் பற்றிய ஸ்தோத்ரங்களை நம் பாரத தேசத்தில் ஒவ்வொருவரும் பாராயணம் செய்து க்ஷேமங்களை அடைவதைக் கண்டு வருகிறோம். இவன் ஒருவனே ரக்ஷக தேவதையானபடியால் ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானுக்காக பாரிப்போடு விரைந்து அவதரித்து அருளி அவரைக் காத்ததைப் போல் ஆபத்துக்காலங்களில் நம்மை கைவிடாமல் காப்பவர் இவர். ஸ்ரீஆதிசங்கரரை ஆபத்காலத்தில் இந்த லக்ஷ்மீந்ருஸிம்ஹனே பாதுகாத்ததாகவும், இப்படி கை கொடுத்து காத்து உதவிய எம்பெருமானைப்பற்றி ஸ்ரீலக்ஷ்மீ ந்ருஸிம்ஹ கராவலம்ப ஸ்தோத்ரம் என்பதாய் ஸ்தோத்ரம் மூலமாய் துதித்து உய்வு பெற்றதாகவும் சரித்ரம் உண்டு. (இந்த கராவலம்ப ஸ்தோத்ரத்தை இந்த நூலிலும் சேர்த்து உள்ளோம்) எம்பெருமானின் அனேக அவதாரங்களிருக்க இந்த ந்ருஸிம்ஹாவதாரத்தையே காக்கும் அவதாரமாகக் கொண்டனர். எம்பெருமானின் அவதாரங்களுக்குப் பிரயோஜனமாக எடுத்த மூன்றில் ஸாது பரித்ராணம் - சான்றோர்களைக் காப்பது - என்பதே தலையானது. மற்றைய இரண்டும் - அதாவது தீயவர்களை மாய்ப்பதும், அறத்தை நிலை நாட்டுவதும் - இந்த ஸாது பரித்ராணத்தின் மற்றொரு பகுதியாகும். இந்த ரக்ஷணம் ஸ்ரீந்ருஸிம்ஹாவதாரத்தில் தெள்ளென விளங்கும். ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானைக் காக்கவே அவர் அவதரித்தார். இதை ஸ்வாமி

தேசிகன் भक्तस्य दानवशिशोः परिपालनाय भद्रां नृसिंहगुहनामधिजग्मुषस्ते என்று விவரித்து அருளியுள்ளார். பயிரைக் காக்கவே களைகளைக் களைவது ஏற்படுகிறது. பயிருக்கு இட்ட உரம் முதலியனவற்றை பயனற்ற களைகள் ஏற்றுக்கொண்டு பயிரையே அழிக்குமளவு வளர்ந்தால்- பயிரைக்காக்க களையெடுப்பதை யொத்தது இது - என்பதை பயிரில் களை போல் அசுரரைக் காய்ந்தான் कलमे यवसापचायनीत्या என்றெல்லாம் ஸ்ரீ ஸ்வாமி தேசிகன் அருளிச்செய்தார். இந்த ரக்ஷணம் நிறம் பெறுவதையே त्वयि रक्षति रक्षकैः किमन्यैः ? त्वयि चारक्षति रक्षकैः किमन्यैः ? என்று வெளியிட்டருளினர். अरक्षितं तिष्ठति दैवरक्षितं, सुरक्षितं दैवहतं विनश्यति என்ற மஹாபாரத சுலோகத்துக்கு உரையிட்ட சான்றோர்களும் ஸ்ரீந்ருஸிம்ஹாவதார வ்ருத்தாந்தத்தையே எடுத்துக்காட்டி விளக்கினர்கள். இப்படி பலபடியாயும் ஸ்ரீந்ருஸிம்ஹனின் பெருமை பரந்து விரிந்துள்ளது.

ஸ்ரீவிஷ்ணு ஆலயங்களிலும், ஸ்ரீவைஷ்ணவர்களின் திருமாளிகைகளிலும் எம்பெருமான் திருவாராதனம் முடிந்து கர்ப்பூர நீராஜனம் செய்யும்போது தொன்று தொட்டு சான்றோர்களால் அநுஸந்தானம் செய்யப்பட்டு வரும் மந்த்ரமான तद्विष्णोः परमं पदं सदा पश्यन्ति सूरयः என்பது ஸ்ரீந்ருஸிம்ஹனைப் பற்றியதாகும். ரிக் வேதத்திலுள்ள 39 வகையான ஸ்ரீவிஷ்ணுஸூக்தங்களில் முதன்முதலில் படிக்கப்பட்ட प्र तद्विष्णुः स्तवते वीर्याय मृगो न भीमः कुचरो गिरिष्ठाः என்பதும் ஸ்ரீந்ருஸிம்ஹனைப் பற்றியதே. இப்படி ரிக் வேதத்தின் அஷ்டகத்தில் (8-7-17-4) வரும் कामस्तदग्रे என்ற மந்த்ரமும் ந்ருஸிம்ஹனைப்பற்றியதே என்பதை வேதபாஷ்யங்களைக் கொண்டு அறிவதுடன், ஸ்ரீஸ்வாமி தேசிகன் இதைத் திருவுள்ளத்தில் கொண்டு காமாஸிகாஷ்டகத்து சுலோகங்களை அமைத்ததும், அங்கு உள்ள காம என்ற சொல்லுக்கு இதையே பொருளாகக் கொண்டதிலிருந்தும், இந்த மந்த்ரத்தில் வரும் सतो बन्धुमसति निरविन्दन् हृदि प्रतीष्या कवयो मनीषा என்பதைத் திருவுள்ளப்பட்டு बन्धुमखिलस्य जन्तोः என்ற சுலோகம் அருளியதையும் கொண்டு அறியலாம். भद्रं कर्णेभिः शृणुयाम देवाः भद्रं पश्येमाक्षभिर्यजत्राः என்ற அஷ்டகத்தில் வரும் மந்த்ரம் ஸ்ரீந்ருஸிம்ஹனைப் பற்றியது என்பது எல்லோரும் அறிந்ததே. இதிலுள்ள பத்ர என்ற சொல் ந்ருஸிம்ஹனைச் சுட்டுவது. இதை அப்படியே கொண்டு ஆசார்யர் भद्रां नृसिंहकुहनामधिजग्मुषस्ते என்றருளியதை அநுஸந்திப்பது. பத்ர என்ற சொல் ஸ்ரீந்ருஸிம்ஹன் - ஸ்ரீராமபத்ரன் - ஸ்ரீபலபத்ரன் என்ற மூன்று அவதாரத்து எம்பெருமான்களையே குறிக்கவல்லது-என்பது அத்யேதாக்

களுக்குப் புரியும். ஆகவே தான் ஸ்ரீஸ்வாமி தேசிகன் தமது ஸ்தோத்ரங்களில் இம்மூன்று அவதாரங்களைக் குறிப்பிடும்போதும் இந்த பத்ர என்ற சொல்லை எடுத்து ஆண்டு இதைக் குறிப்பால் உணர்த்தியுள்ளார். श्रीरामभद्र! नमस्ते पुनस्ते नमः, तालाङ्कस्य तथाविधा विहृतयः तन्वन्तु भद्राणि नः என்றது காண்க.

இப்படி இந்த ந்ருஸிம்ஹ மந்த்ரங்கள் பல உள்ளன. ஸ்ரீந்ருஸிம்ஹதாபநீயோபநிஷத்தில் பல மந்த்ரங்கள் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. அவற்றையெல்லாம் இதில் முதற்கண் அமைத்துள்ளோம். இவ்வளவு விரிவாகக் காட்டியது ஏனெனில் - இந்த மந்த்ரங்கள் யாவும் நம்பூர்வர்களால் தம்தம் நூல்களில் பலபடி எடுத்து ஆளப்பட்டவை என்பதை விளக்கவே. மேலும் - இங்கு எடுத்த மந்த்ரங்கள் - மந்த்ர சாஸ்த்ர நூல்களான மந்த்ர ரத்ன மஹோததி, மந்த்ர ரத்நாகரம் முதலானவைகளில் ஸ்ரீந்ருஸிம்ஹனைப்பற்றிய மந்த்ரங்களை ஜபிக்கும் போது த்யானத்துக்காக எடுத்துக் காட்டப்பட்டவையுமாகும். விரிவுக்கு அஞ்சி இத்துடன் நிற்கிறேன்.

ஸ்ரீ ந்ருஸிம்ஹனைப் பற்றிய மந்த்ரங்களும், அதன் பயனும், அந்த மந்த்ரங்களை அநுஸந்தானம் செய்யும் முறைகளைப் பற்றிய விளக்கங்களும் நூல்களில் பரந்து விரிந்துள்ளன. அடியேனுக்குத் தெரிந்த வரையில் மற்றைய தேவதைகளைவிட ஸ்ரீந்ருஸிம்ஹனைப் பற்றிய குறிப்புகளே மந்த்ரசாஸ்த்ரத்தில் அதிகம் விரவி உள்ளன என்று கூறுவேன். இது மிகையில்லை. ஸ்ரீஸ்வாமி தேசிகன் ஸ்ரீசரணகதி கத்யபாஷ்யத்தில் यथा नरसिंहरूपे सप्तसप्ततिभेदाः என்று அருளிச்செய்துள் ளார். இதன்கருத்தாவது- ஸ்ரீந்ருஸிம்ஹன் திரு வுருவ அமைப்புகளில் 77 வகை பிரிவுகள் எப்படியோ -அப்படி என்பதாய் அமையும். சில்பசாஸ்த்ரங்களிலும், ஆகமங்களில் ஸ்ரீமூர்த்தி நிர்மாண ப்ரகரணங்களையும், புராணங்களையும், மந்த்ர சாஸ்த்ரங்களில் தெரிவித்த த்யாந சுலோகங்களையும் கொண்டு இப்படி ஸ்ரீந்ருஸிம்ஹ மூர்த்திகளில் உள்ள எழுபத்தேழு பிரிவுகளை அறிய வேண்டும். அடியேனுக்குத் தெரிந்த வரையிலும் முப்பத்திரண்டு வகையான ஸ்ரீந்ருஸிம்ஹத் திருவுருக்களை அமைக்கும் வழியைப்பற்றி கூறும் சில்ப சாஸ்த்ராதிகளை அறிய முடிகிறது. மேற்கொண்டு உள்ளதைப்பற்றி அறிய முடியவில்லை. ப்ரஸித்தமான சில்பிகளைக் கேட்டேன். அவர்களும் அப்படியா? எங்களுக்குத் தெரிந்த வரையில் 24 வகையாக ஸ்ரீந்ருஸிம்ஹ மூர்த்தியை அமைக்கும் வழிகளையே சில்ப்ப சாஸ்த்ரங்களின் மூலம் அறிவோம். இது புது விஷயமே. ஆராய வேண்டும். பெரிய மஹாஜனை -

ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரரான – சில்பார்த்த ஸாரம் என்பதாகவும் ஒரு நூல் இயற்றியுள்ளதாய் ஆன்றோர்களால் தெரிவிக்கப்பட்ட ஸ்ரீஸ்வாமி தேசிகன் அருளிச் செய்தார் – என்றால் அதற்கு எங்கேயாவது மூலம் – சான்று இருந்தே தீரும். ஆராய்கின்றோம் என்றனரே தவிர உள்ளபடி அறிந்தவர் ஒருவருமில்லை. நாளாக ஆக அறிவு என்பது குறைவுபட்டு வரும் இந்நாளில் ஸ்ரீந்ருஸிம்ஹனைப்பற்றி ஸ்ரீஸ்வாமி தேசிகன் அருளிய இந்த வாக்யத்தின்படியான உண்மை நிலையை ஆர்வமுள்ள ஸ்ரீந்ருஸிம்ஹ பக்தர்கள் ஆராய்ந்து வெளியிட்டால் உலகுக்கு நன்மை பயக்கும். முன்வருவார்களாக. இப்படி ஒரு விஷயம் ரத்னம்போல் கத்யபாஷ்யத்தில் உள்ளது என்பதே அனேகம் ந்ருஸிம்ஹ பக்தர்களுக்கே தெரியவில்லை.

அநந்த பாஹும் சசி ஸூர்யநேத்ரம் (11-19) என்றவிடத்தில் ஸ்ரீகீதா பாஷ்ய வ்யாக்யானத்தின்போது தாத்பர்ய சந்த்ரிகையிலும் यथा संहिता भेदेन वाराह-नारसिंहादेः अन्यथाऽन्यथा सन्निवेश-वर्ण-भुजादिवैचित्र्यम् तद्वत् श्रीविश्वरूपविग्रहेऽपि वचनबलादेव तथा तथा वैचित्र्यमङ्गीकुर्मः என்று ஸ்ரீஸ்வாமி தேசிகன் அருளிச்செய்துள்ளார். ஸ்ரீவராஹ மூர்த்திகளிலும் ஸ்ரீந்ருஸிம்ஹ மூர்த்திகளிலும் அந்தந்த பாஞ்சராத்ர ஸம்ஹிதைகளின் உட்பிரிவுகளின்படிக்கு உருவ அமைப்பு, நிறம் திருக்கைகள் முதலானவைகளில் வியத்தகு நிலை எப்படி உள்ளதோ- அங்ஙனமே ஸ்ரீவிச்வரூப உருவத்திலும் இந்த கீதாவசனத்தைக் கொண்டு வியத்தகு நிலையை ஒப்புக் கொள்கிறோம் – என்று இதன் கருத்தாகும். இதனாலும் ஸ்ரீந்ருஸிம்ஹ ரூபத்தில் பலபடியான ஸேவையை நாம் அறியலாம்.

चतुर्भिराजानुविलम्बिभिर्भुजैः என்ற (சு. 33) ஸ்ரீஆளவந்தார் ஸ்தோத்ரத்தின் பாஷ்யத்திலும் ஸ்ரீஸ்வாமி தேசிகன் दृश्यते च नृसिंह कृष्णाद्येकैकरूपेष्वेव द्विभुजत्व-चतुर्भुजत्ववर्णनभेदाद्यवान्तरवैषम्यम् என்றருளிச் செய்தார். திருக்கோட்டியூரில் தெற்காழ்வான் ஸந்நிதியில் எழுந்தருளி யிருக்கும் உத்ஸவமூர்த்திக்கு நான்கு திருக்கைகளும், ப்ராகாரத்தில் எழுந்தருளியிருக்கும் சிலாமூர்த்திக்கு எட்டுத் திருக்கைகளும் ஸேவையாவதை இன்றும் நேரில் சென்று அறியலாம். ஸ்ரீந்ருஸிம்ஹ மூர்த்திகளில் இரண்டு திருக்கைகள் முதற்கொண்டு 64 திருக்கைகள் வரையிலும் ஸேவையாகும் திருவுருக்கள் உள்ளதாய் தொல்பொருள் ஆராய்ச்சியாளர்கள் தெரிவித்துள்ளனர்.

उद्धृतासि वराहेण कृष्णेन शतबाहुना என்ற உபநிஷத் ஸ்ரீவராஹ பெருமாளுக்கு ஒரு அவஸரத்தில் நூறு திருக்கைகள் உண்டு என்பதைத் தெரிவித்தது. இங்குள்ள சத என்ற சொல் शतं सहस्रमयुतं सर्वमानन्त्यवाचकम्

என்ற கோசத்தின்படி பல என்ற கருத்தில் அமைந்தது அல்ல-என்பதை ப்ராசீனமான வேத பாஷ்யகாரர்களின் உரைகளைக் கொண்டு அறியலாம். அதே போல் ஸ்ரீந்ருஸிம்ஹ ரூபத்திலும் ஆயிரம் திருக்கைகள் ஒரு அவஸரத்தில் உண்டு என்பதை

நல்லை நஞ்சே ! நாம் தொழுதும் நம்முடை நம் பெருமான்
அல்லிமாதர் புல்க நின்ற ஆயிரம் தோளனிடம்
நெல்லி மல்கிக் கல்லுடைப்பப் புல்லிலையார்த்து அதர்வாய்ச்
சில்லி சில்லென்றொல்லறாத சிங்கவேள்குன்றமே

என்ற பாசுரத்தில் (பெரிய திருமொழி 1-7-9) திருமங்கைமன்னன் அருளிச்செய்தார். ஆக எம்பெருமான் திருவுருக்களில் ஸ்ரீக்ருஷ்ண - ஸ்ரீந்ருஸிம்ஹ - ஸ்ரீவராஹரூபங்களில் பல வகைகளுண்டு என்பதாய் ஏற்படுகிறது.

இத்தனை ரூபங்கள் ஒரே மூர்த்திக்கு எங்ஙனம் ஏற்படும்? என வேண்டாம். सौम्यासौम्यैः जगद्रूपैः, कृष्णरूपाण्यसंख्येयानि என்றவிடங்களில் தெரிவித்தபடி அண்டினவர்களைக் காப்பதில் உள்ள ஆவலால் அவரவர் விரும்பியவாறு எம்பெருமான் ஸேவை ஸாதிக்கிறன் என்பதே உண்மையான நிலையாகும். இது.

தமருகந்தது எவ்வுருவம் அவ்வுருவம் தானே
தமருகந்தது எப்பேர் மற்றப்பேர் - தமருகந்து
எவ்வண்ணம் சிந்தித்து இமையாதிருப்பரே
அவ்வண்ணம் ஆழியானும் -முதல் திருவந்தாதி 44.

என்ற பொய்கையாழ்வார் பாசுரத்தாலும், यो यो यां यां तनुं भक्तः श्रद्धयाऽर्चितु मिच्छति என்கிற ஸ்ரீகீதா வசனத்தாலும் விளங்கும். இதனால் எம்பெருமானுக்கு உருவம் கிடையாது. ப்ரம்ஹஸ்வரூபமே அமையும்- என்றவாறு இசைந்து विग्रहो हविरादानं युगपत् कर्मसन्निधिः । तृप्तिः फलप्रदानं च देवतानां न विद्यते என்ற குமாரிலசாங்கராதிகளின் கொள்கை ஏற்புடையதன்று. எம்பெருமானுடைய திவ்யாத்மஸ்வரூபம் போலே திவ்யமங்கள விக்ரஹமும் நிலையாயுண்டு என்பதற்கு ரிக்-ஸாம-யஜுர் அந்தர்வண வேத வாக்யங்களைக் கொண்டு ஸ்ரீஸ்வாமிதேசிகன் நிலைநாட்டிய பாங்கை ஸச்சரித்ரரக்ஷையில் ஸுதர்சன பாஞ்சஜந்ய தாரணாதிகாரத்திலும், தத்துவடீகையிலும், ஸேச்வரமீமாம்ஸையிலும் ஸேவித்து அறிவது. ஆகவே न ते रूपं न चाकारो नायुधानि न चास्पदम् । तथाऽपि पुरुषाकारो भक्तानां त्वं प्रकाशसे என்ற ஸ்ரீசௌனகரின் வாக்கும் எம்பெருமானின் உருவங்களை மறுக்க வந்தது அல்ல. ஆயுதங்களாலும் உருவங்களாலும் பக்தர்களைக் காப்பதே பயன் - இதன்றி நாட்டிலுள்ளோர் ஏதேனும் ஆபத்து

நேரிட்டபோது [illegible]ார்க்கருவிகளைக் கையாள்வது போல் - தேவரீரும் பயந்து எப்போதும் ஆயுதங்களைத் தாங்கி வருபவரில்லை - என்பதை விளக்கவே வந்தது. இது ஸர்வார்த்தஸித்தியில் மேற்படி வசனத்தை எடுத்து ஆசார்யரே விளக்கிய கருத்தாகும். இதை अपार्थ इति निश्चितः प्रहरणादियोगस्तव स्वयं वहसि निर्भयः तदपि रङ्गपृथ्वीपते । स्वरक्षणमिवाभवत् प्रणतरक्षणं तावकं, यदात्थ परमार्थवित् नियतमन्तरात्मेति ते என்று அபீதிஸ்தவத்தில் கம்பீரமாயும், சாதுர்யமாயும் எடுத்து ஆசார்யரே விளக்கியுள்ளதை ரஸிப்பது.

ஔபாஸனத்தில் எல்லோராலும் பயன்படுத்தப்படும் மந்த்ரம் ஒன்று உண்டு. அது ஸ்ரீந்ருஸிம்ஹனைப் பற்றியதே என்ற கருத்துக்கு இசைவாக ஸ்ரீஸ்வாமிதேசிகன் ஸேச்வர மீமாம்ஸையில் தமது திருவுள்ளத்தை வெளியிட்டருளியுள்ளார். அது வருமாறு. चत्वारि शृङ्गा त्रयो अस्य पादा द्वे शीर्षे सप्त हस्तासो अस्य । त्रिधा बद्धो वृषभो रोरवीति महो देवो मर्त्यान् आविवेश என்பதாகுமிது. இதை எடுத்து இதே போன்ற உருவில் ஸேவையாகும் எம்பெருமானின் ஒரு உருவை இன்றும் ஓர் திவ்யதேசத்தில் ஆராதித்து வருவதாக சான்றோர் பகர்வர் - என்ற கருத்தில் ஸ்ரீஸ்வாமி தேசிகன் அருளியதைக் காண்மின் -

"चत्वारि शृङ्गा त्रयः" इत्यादिकं न अविद्यमानवचनम् । "हिरण्मयः पुरुषः" "हिरण्यश्मश्रुर्हिरण्यकेशः" इत्यादाविव "अञ्जसैव विश्वसृजो रूप" विशेषस्य प्रतिपादनात् । विग्रहादिमत्त्वं च देवतानां समर्थयिष्यते । ईदृशं च रूपम् अद्यापि क्वचिदर्चयन्ति । स्मरन्ति च वैखानससंहिताभेदकर्तारो महर्षयः"

(ஸேச்வரமீமாம்ஸை 1-2-4 ஸூ)

இப்படியெல்லாம் பலவிதமான பெருமைகளை உடைய ந்ருஸிம்ஹனைப் பற்றிய பல அரிய சீரிய மந்த்ர-ஸ்தோத்ர-பாசுரங்களைத் தொகுத்து எல்லோரும் பயன்பெற வேண்டும் என்ற எண்ணத்தில் இதில் வெளியிட்டுள்ளனர். இதில் ப்ரபஞ்சஸாரம். இருப்பத்து மூன்றுவது படலத்திலிருந்து ஸ்ரீந்ருஸிம்ஹமந்த்ர ப்ரயோகவிதானம் என்ற பகுதியைச் சேர்த்து உள்ளோம். ஏன்? எனில் - இந்நாளில் இதில் தெரிவித்தப்படி மந்த்ரங்களை ஆசான்மூலம் உபதேசமாய் பெற்று மந்த்ராங்களை ஆவ்ருத்தி செய்பவர்கள் அருகிவந்த போதிலும்-யாரேனும் இருப்பின் அவர்களைக் கொண்டு சில - பல த்ருஷ்ட பலங்களை அடைய வழியாகுமே - என்பதே நோக்கமாகும், ஏனென்றல்

1. ஸ்ரீந்ருஸிம்ஹ மந்த்ரத்தை இதில் கூறியபடி எண்ணுயிரம் முறை ஜபித்தால் யமன் வாயில் அகப்பட்டவனும் உயிர்பெற்றெழுவான்

2. ஸ்ரீந்ருஸிம்ஹ பீஜாக்ஷரத்தை ஜபித்து ஸ்ரீ வைஷ்ணவ ததீயாராதனம் செய்தால் இவ்வுலகிலுள்ள எல்லாவகை ஸித்திகளையும் அடையலாம் (சு-18)

3. அருகம்புல்லின் மூவகைகளைக் கொண்டு எண்ணாயிரம் முறை நெருப்பில் ஹோமம் செய்தால் இவ்வுலகில் யாரால் ஏற்பட்ட தொல்லைகளையும் கடக்கலாம். (சு-20)

4. நாட்டுக்குத் தீமைகளை அளிக்கும் கெட்ட சகுனம் முதலியன தோன்றினால் அவைகள் நீங்கும். (சு-21)

5. கெட்ட கனவுகளைக் கண்டால் மேற்படி மந்த்ரங்களை ஜபித்துக் கொண்டு விழித்திருந்து மீதி இரவைப் போக்கினால் அந்த தொல்லையினின்று விடுபடுவதுடன், அக்கணமே அக் கனவே நன்மைகளையும் பயக்கும். (சு-22)

6. கொடிய மிருகங்கள் சூழ்ந்த காட்டுப்பாதையாய் செல்ல நேரிட்டபோது இம்மந்திரத்தை ஜபித்தால் பிறரால் ஸாதிக்க முடியாத செயல்களையும் ஸாதிக்க முடியும். (சு-23)

7. கொடிய விஷம் தீண்டப்பட்டு இறந்து விட்டானோ? என்று அச்சமான நிலையிலிருப்பவனை, இந்த மந்திரத்தை எண்ணாயிரம் முறை ஜபித்த நீரால் நீராட்ட அவன் பிழைத்தெழுவான் (சு-24)

8. நூற்றெட்டு முறை இம்மந்திரத்தை ஜபித்தால் எலி-எட்டுக்கால் பூச்சி-தேள்-ஜல மண்டலீ முதலானவற்றின் கடியால் ஏற்பட்ட விஷம் நீங்கும். (சு-25)

9. நாள்பட்ட தலைவலி-கண்வலி-கழுத்துச்சுளுக்கு-பல்வலி-கழுத்துப்புடை (வீக்கம்) - வயிறு அழற்சி - விஷஜ்வரம் - வயிற்றுப்போக்கு - வாந்தி-அடுக்குவிக்கல் - பிறர் மந்த்ரம் போட்டதால் ஏற்பட்ட கோளாறுகள் - பிறர் மருந்து வைப்பு - பில்லி சூன்யம் - ஏவல் இதனால் வரும் விகாரங்களையும் இம்மந்த்ர ஜபம் அகற்றும். (சு-26)

10. சிங்கத்தின் வாயால் கவ்வப்பட்ட மானைப் போன்று தன் எதிரியை எண்ணிக் கொண்டு இம்மந்திரத்தை ஜபித்தால் விரைவில் எதிரி அழிவான் (சு-27)

11. இம்மந்திரத்தை ஜபித்துக்கொண்டு எந்த திசையை நோக்கி இவன் நீரைத் தெளிக்கிறானோ அந்த திசைக்கு இவன் எதிரி சென்று மறைவான். எப்படி? பிள்ளை, மனைவி, பணம், வீடு முதலியனவற்றை இழந்து மறைவான். (சு-28)

12. ஒருவரை தன்வயம் ஈர்ப்பது, ஒரு பொருளை அடைய விரும்புவது, ஒருவருக்கும் - அவருக்கு வேண்டப்பட்டவருக்கும் இடையே சண்டைமூட்டி விடுவது, அயலாரை மோஹிக்கச் செய்வது, பேய் பிசாசுகளை நீக்குவது இவைகளை விரும்பினால் அததற்குத் தக்கபடி இம்மந்திரத்தை ஜபித்து ஸித்தியை அடையலாம் .(சு-32)

(இங்கு கூறிய ஆகர்ஷணம் - உச்சாடனம் இவைகளைச் செய்யும் முறையைப் பற்றி அக்னிபுராணம் 123வது அத்யாயாத்திலிருந்து ப்ரமாணங்களைக் காட்டி आकर्षणानि निगमान्तसरस्वतीनां उच्चाटनानि बहिरन्तरुपप्लवानाम् (யதிராஜஸப்ததி 26) என்ற சுலோகத்தின் வியாக்யானத்தில் அடியேன் விரிவாய் எழுதியுள்ளேன். அங்கே கண்டு கொள்வது)

13. அரசனுக்கு ஏற்பட்ட தொல்லைகளை நீக்கி அரசனின் வெகுமதியை விரும்புபவர்கள் தினமும் இந்த ஸ்ரீந்ருஸிம்ஹ மந்த்ரத்தால் ஸூர்ய மண்டலத்தின் நடுவில் எழுந்தருளியிருக்கும் அந்தர்யாமியை தியானித்துக் கொண்டு உதய காலத்தில் பஸ்ம (சாம்பல்)த்தை மந்திரித்துக் கொடுத்தால் ஈடேறும். (சு-33)

14. பிற அரசாங்கத்தால் நம் நாட்டிற்குத் தொல்லை ஏற்பட, அதை நீக்க விரும்புமவர், ஸ்ரீந்ருஸிம்ஹனை இம் மந்திரங்கொண்டு கெச்சக்காய் மரத்தின் ஸமித்துக்களால் ஆயிரத்தெட்டுமுறை அக்னியில் ஹோமம் செய்தால் தொல்லை நீங்கும்.

15. பணம் வேண்டுமா? வில்வமரத்து ஸமித்தால் ஆயிரத்தெட்டுமுறை ஹோமம் செய்யவும். அல்லது வில்வ இலை - வில்வப்பூ - வில்வக்காயின் சில்லுகள் இவற்றாலும் ஹோமம் செய்யலாம். பிள்ளை பிறக்க வேண்டுமா? பந்துஜீவச்செடியின் ஸமித்துக்களால் ஆயிரத்தெட்டு முறை இம் மந்திரங்கொண்டு ஹோமம் செய்யவும். அல்லது அதன் பழங்களாலும் ஹோமம் செய்யலாம். ஆயுள் வளர வேண்டுமா? அருகம்புல்லைக் கொண்டு இம்மந்திரத்தால் ஆயிரத்தெட்டு முறை ஹோமம் செய்யவும். கட்டாயமாக ஒரு வருஷத்துக்குள் பயன் கிட்டும். (சு-39)

16. நூற்றெட்டுமுறை ஸ்ரீந்ருஸிம்ஹ மந்திரத்தால் ஜபிக்கப்பட்ட வசம்பை காலையில் உண்டு வர - நாளடைவில் வேத - சாஸ்த்ரங்களில் வல்லவனாவான். (சு-40)

17. வீணாக விரித்துக் கூறுவானேன் ? எதெதை விரும்புகிறானோ அவை யாவும் இம் மந்திரத்தை ஜபிப்பதால் விரைவில் அடைவான். ஏன்? பிறவிக்கடலைத் தாண்டி மோக்ஷமும் கடைசியில் கை கூடும். (சு-41)

18. பூத-ப்ரேத-பிசாசங்களின் தொல்லை ஒழிய வெட்ட வெட்ட முளைக்கும் அருகம்புல்லின் மூவாயிரம் ஸமித்துக்களைக் கொண்டு பாலில் தோய்த்து நான்கு நாட்களுக்கு தினந்தோறும் ஹோமம் செய்தால் போதும். சாந்தமாகி விடும். (சு-49)

19. ஸ்ரீந்ருஸிம்ஹ பீஜாக்ஷரத்தை முறைப்படி பூவரச இலையில் எழுதியோ, அல்லது பனை ஓலையில் எழுதியோ, நோயாளியின் தலையில் சில நேரம் கட்டி வைத்தால் - விஷஜ்வரம், புத்தி மாறாட்டம், நாள்பட்ட தலைவலி இவைகள் நீங்கும். (சு-50)

20. தேன் பால் நெய் இம்மூன்றிலும் நனைத்த செவ்வல்லிப் பூக்களைக் கொண்டு ஸ்ரீந்ருஸிம்ஹ மந்த்ரத்தைச் சொல்லி அழகியசிங்கரை தினந்தோறும் ஆயிரம் முறை ஹோமம் செய்து வந்தால், ஒரே மாதத்தில் விரும்பிய பயனை மந்த்ரஜபம் செய்பவன் அடைகிறான். இதே போல் ஒரு வருடம் ஹோமம் செய்துவர செல்வம்-தான்யங்கள் இவை நிரம்பிய வீடு, வாயில் இவைகளை உடையவனுய் ஆவான். (சு-51)

21. அன்றலர்ந்த செந்தாமரைப்பூக்களை தேன் - பால் - நெய் இவற்றில் தோய்த்து ஓராயிரத்தெட்டு முறை இந்த நரஸிம்ஹ மந்த்ரங்களால் ஹோமம் செய்தால் - மிகப் பெரும் செல்வமும், நீண்ட ஆயுளும் பெற்று, எல்லா மாந்தருக்கும் வேண்டியவனுயும் ஆவான். (சு-52)

22. தேன்- பால் - நெய்யில் கலந்த பொரிகளைக் கொண்டு நரஸிம்ஹ மந்த்ரங்களைக் கொண்டு அக்னியில் முற்பகலில் பதினைந்து நாட்களுக்கு தினமும் ஆயிரம்முறை ஹோமம் செய்தால் அழகிய செல்வம்மிக்க பதிவ்ரதையான பெண்ணை மனைவியாய் வரன் அடைவான். அதைப்போல் எல்லா வகையிலும் சிறந்த வரனை மணாளனுகப் பெண் அடைவாள். (சு-53)

23. கரமஞ்ஜரீ, ராஜீ(?) என்ற தாவரங்களின் ஸமித்தைக் கொண்டும், ஹவிஸ் (சுத்தமான அன்னம்) நெய் இவைகளைக் கொண்டும் இரண்டாயிரம் முறை ஸ்ரீந்ருஸிம்ஹ மந்த்ரத்தால் ஹோமம் செய்ய - நவக்கிரஹ பீடைகளும், பில்லி-சூன்யம்-ஏவல்- வைப்பு முதலானவற்றால் வரும் அழிவுகளும் உண்டாகாது. (சு-54)

24. மெல்லிய அருகம்புல் - சற்று பட்டையான அருகம்புல் -மிக நீண்ட அருகம்புல் என்ற மூவகைகளையும் கொண்டு பால், நெய் இவைகளில் தோய்த்து, நெருப்பில் ஸ்ரீந்ருஸிம்ஹனை த்யானம் செய்துக் கொண்டு ஆயிரம் முறை ஹோமம் செய்தால் நோய்களிலிருந்து

விடுபட்டு, நீண்ட ஆயுளை அடைந்து, மனைவி மக்கள் செல்வம் முதலியவைகளுடன் மகிழ்வான். (சு-55)

25. மிகவும் விரிவாய் கூறி என்? யாவனொருவன் முறைப்படி ஸ்ரீந்ருஸிம்ஹ மந்த்ரத்தை தினந்தோறும் ஜபம் செய்து வருகிறனோ அவன் விரும்பும் ந்யாயமான நற்பலன்களைப் பெற்று, மந்த்ர ஸித்தியை அடைந்து, செல்வச்சிறப்பைப் பெற்று, அந்தணர்கள் - அரசர்களால் கொண்டாடப்பட்டவனாய், எப்பொழுதும் மன அமைதியுள்ளவனாய் வாழ்வாங்கு வாழ்ந்து கடைசியில பரிசுத்தமான ஸ்ரீந்ருஸிம்ஹனின் பரமபதத்தையும் அடைவான். (சு-56)

இப்படியெல்லாம் இந்த ஸ்ரீந்ருஸிம்ஹனைப் பற்றிய மந்த்ரங்களின் பெருமைகள் ப்ரபஞ்சஸாரத்தில் விரிவாய் அமைந்துள்ளன. ஆகவேதான் நம் முன்னோர்கள் திருமண் இட்டுக்கொள்ளும் முன் குழைத்த திருமண்ணில் ஸ்ரீந்ருஸிம்ஹ பீஜாக்ஷரத்தை எழுதி ( இதை எழுதுவதில் நான்கு முறைகள் உண்டு. அதை அவரவர் ஸம்ப்ரதாயப்படி ஆசார்யர்கள் மூலம் அறிந்து எழுத வேண்டும். மந்த்ரமானபடியால் இதற்கு மேல் விளக்கக்கூடாது) எம்பெருமானை தியானித்து வருகின்றனர்.

ஒளியுருவான ஸ்ரீசக்கரத்தாழ்வானையும் ப்ரதிஷ்டை செய்யும்போது ஆகமங்களிலும், உருவத்தை அமைக்கும் முறையை விளக்கவந்த சில்ப சாஸ்த்ரங்களிலும் கிழக்கு முகமாய் எம்பெருமானின் ஸங்கல்பமே உருவான ஸ்ரீசக்கரத்தாழ்வானையும், மேற்குபுறத்தில் ஸ்ரீந்ருஸிம்ஹனின் திருவுருவை அமைக்கும்படியும் விளக்கியுள்ளன. த்யானம் செய்யும்போதும் அடியில் ஸ்ரீவராஹப் பெருமானின் தெற்றுப்பல்லின் ஒளியால் பழுப்பாகவும், மேலே ஸ்ரீந்ருஸிம்ஹனின் அட்டஹாஸம் (பெருச்சிரிப்பு) இவற்றின் தொடர்பையும் கொள்ளவேண்டும் என்ற உள்ளது. दंष्ट्रा कान्त्या कडारे कपटकिटितनोः कैटभारेरघस्तात् ऊर्ध्वं हासेन विद्धे नरहरिवपुषो मण्डले वासवीये என்ற ஸ்ரீஸுதர்சன சதகத்து சுலோகத்தையும், அதற்கு மூலமான ஸ்ரீஅஹிர்புத்ந்ய ஸம்ஹிதையையும் இங்கு அநுஸந்திப்பது.

மிக மிக ப்ராசீனமான கோவில்கள் யாவற்றிலும் முதலில் ஸ்ரீந்ருஸிம்ஹனை ப்ரதிஷ்டை செய்திருப்பார்கள். ஸ்ரீரங்கத்தில் மேட்டழகிய சிங்கர் ஸந்நிதியும், காஞ்சியில் மலையடிவாரத்தில் ஸ்ரீந்ருஸிம்ஹன் ஸந்நிதியும், கீழ்த்திருப்பதியில் தேர்வான் குளத்தருகிலுள்ள ப்ராசீனமான ந்ருஸிம்ஹன் ஸந்நிதியும், திருமாலிருஞ்சோலை, ஆழ்வார் திருநகரி, திருக்கோட்டியூர், திருவாலி-திருநகரி முதலான மிகமிகப் பழமையான திவ்ய தேசங்களிலும்

இதை இன்றும் அறியலாம். ஸ்ரீந்ருஸிம்ஹனின்றி காப்பில்லை. அவன் ஸர்வ ரக்ஷகன். இதையே पालनेऽनन्यसाध्ये என்றார் ஆசார்யர். மேலும் இங்ஙனமே கவிச்சக்ரவர்த்தி கம்பநாட்டாழ்வானின் இராமா வதாரத்தினின்றும் இரணியவதைப் படலத்துப் பாட்டுக்களையும் இங்கு சேர்க்க எண்ணியதும் ஈடேறவில்லை. அச்சுச்செலவு கருதியே ! நம் கம்பனைப் பாடினையோ? என்று ஸ்ரீமந் நாதமுனிகள் கம்பநாட்டாழ்வானை வினவ, இதோ பாடலுற்றேன் என அகமகிழ்ந்து, நேராக ராமாணயத்தில் ஸ்ரீந்ருஸிம்ஹாவதாரத்தைக் குறிப்பிட வாய்ப்பில்லாவிடினும் ஓரிடத்தில் ஏற்படுத்திக் கொண்டு இரணியவதைப் படலத்தைப் பாடியருளினர் கம்பர். கம்பத்திலிருந்து தோன்றிய தேவானபடியால் கம்பன் - நரஸிம்ஹனவான். न ह्येष स्थाणोरपराधः, यदेवमन्धो न पश्यति என்ற யாஸ்கரின் நிருக்த வாக்யத்துக்கு உரையிட்ட சான்றோர்கள் அங்குள்ள ஸ்த்தாணு சப்தத்துக்குக் கம்பம் மட்டிலும் பொருள் - எனக் கொள்ளாமல், கம்பத்திலிருந்து தோன்றிய स्तम्भेऽवतारः என்னப்பட்ட ஸ்ரீந்ருஸிம்ஹனையும் கொண்டனர். अव्यक्तविषय एकः स्थाणुः पुरुषः श्रुतोऽस्ति यः श्रुतिषु என்ற ஸ்ரீஹர்ஷனின் கண்டனகண்டகாவ்யத்தின் மங்கள சுலோகத்துக்கு உரையிட்ட பழம் உரையாசிரியரும் தமது ப்ரகாச வ்யாக்யானத்தில் ஸ்த்தாணு ந்ருஸிம்ஹ : என்றார். ஆகவே தான் கம்பநாட்டாழ்வானுக்கும் கம்பனைப்பாடியபடியாலேயே கம்பன் எனப் பெயர் என்பர். இத்தகைய இரணியவதைப் படலத்தைச் செவியுற்ற ஸ்ரீரங்கம் கோவிலில் எழுந்தருளியுள்ள மேட்டழகிய சிங்கர் தாமே அதை தலையசைத்து உகந்து, முழங்கினது வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த செய்தியாகும். இத்தகைய பாசுரங்கள் கிடைத்தற்கரிய பொக்கிஷங்களாகும்.

இங்ஙனம் இன்னமும் பல துதிகளை இந்நூலில் சேர்க்க வேண்டியிருப்பினும், பலவற்றிற்கு தமிழில் உரை எழுதி வெளியிட்டால் நன்றாக இருக்குமே ! என்பது தெரிந்தும், அச்சு செலவு மிகையாகிவிட்ட இந்நாளில் அது ஈடேறவில்லை. பெற்றது குணமாக என்று ஸ்ரீஸ்வாமிதேசிகன் அருளியபடி இவ்வளவேனும் இச்சபையாரைக் கொண்டு எம்பெருமான் ஸ்ரீலக்ஷ்மீந்ருஸிம்ஹன் தமது துதிகளை வெளியிட்டுக்கொண்டானே என்பது பற்றி அந்த எம்பெருமான் திருவடிவாரத்தில் பிரணமங்களைச் செய்து இதை ஆஸ்திகர்கள் கையில் ஸமர்ப்பிக்கின்றோம்.

ஸ்ரீந்ருஸிம்ஹனைப் பற்றிய பல விஷயங்களில் ஒரு சிலவனவற்றையே இங்கு வெளியிட முடிந்தது. नातीवास्मि निरालम्बो न च

सर्वं सुनिश्चितम् । अद्य यावद् विमृष्टं तु नान्तर्जरयितुं क्षमम् என்று அடியேன் ஆசார்யரான ஸ்ரீமத் விசிஷ்டாத்வைத ஸ்த்தாபகாசார்யரான ஸ்ரீ அபிநவ தேசிக உத்தமூர் வாத்ஸ்ய ஸ்ரீவீரராகவார்ய மஹாதேசிகன் வைசேஷிகரஸாயனத்தில் அருளிச் செய்தாயிற்று. அந்த ஸ்ரீஸூக்தியின் கருத்துப்படிக்கு அடியேனுக்குத் தெரிந்த ஸ்ரீந்ருஸிம்ஹனைப்பற்றிய சில-பல விவரங்களை இதில் வெளியிட்டேன். அடியேனை இச் சீரிய பணியில் ஈடுபடுத்திய ஸ்ரீவிசிஷ்டாத்வைத ப்ரசாரிணி ஸபையாருக்கு அடியேன் கடமைப்பட்டவனாவேன். இதேபோல் ஸ்ரீஸுதர்சனாழ்வானைப் பற்றிய ஸ்தோத்ர நூலும் விரைவில் வெளிவர உள்ளது. எம்பெருமான் அருளை ப்ரார்த்திக்கிறோம்.

2-12-1990
ப்ரமோத திருக்கார்த்திகை
ஸ்ரீதேசிக வித்யாபவனம்
மயிலை, சென்னை-4

சு. பையம்பாடி சேட்டலூர்
**வா. ஸ்ரீவத்ஸாங்காசார்யன்**

श्रीरस्तु

श्रीमते रामानुजाय नमः । श्रीमते निगमान्त महादेशिकाय नमः ।

श्रीनृसिंह तापनीयोपनिषदि दृष्टाः

# श्रीलक्ष्मीनृसिंहमन्त्राः

हरिः ओम्

कामस्तदग्रे समवर्तताधि मनसो रेतः प्रथमं यदासीत् ।
सतो बन्धुमसति निरविन्दन् हृदि प्रतीष्या कवयो मनीषा ।।

अष्टके ८. अ. ७. वर्गे १७ - ४

स्तुहि श्रुतं गर्तसदं युवानं मृगं न भीममुपहन्तुमुग्रम् ।
मृडा जरित्रे सिंह स्तवानो अन्यं ते अस्मिन्निवपन्तु सेनाः ।।

मण्डले २-सू -३३ मं-११

यतो वीरः कर्मण्यः सुदक्षो युक्तग्रावा जायते देवकामः ।

मण्डले १-सू -२ मं-९

यस्मान्न जातः परोऽन्योऽस्ति य आविवेश भुवनानि विश्वा ।
प्रजापतिः प्रजया संविदानस्त्रीणि ज्योतींषि सचते स षोडशी ।।
सविता प्रसविता दीप्तो दीपयन् दीप्यमानः ।
ज्वलन् ज्वलिता तपन् वितपन् सन्तपन् रोचनो रोचमानः शोभनः शोभमानः कल्याणः ।।

एकः पुरस्तात् य इदं बभूव यतो बभूव भुवनस्य गोपाः ।
यमस्येति भुवनं साम्पराये नमामि तमहं सर्वतोमुखम् ।।
प्र तद् विष्णुः स्तवते वीर्याय मृगो न भीमः कुचरो गिरिष्ठाः ।
यस्योरुषु त्रिषु विक्रमणेष्वधि क्षियन्ति भुवनानि विश्वा ।।

अष्टके २-प्र - ८-१६

भीषाऽस्मात् वातः पवते भीषोदेति सूर्यः ।
भीषास्मादग्निश्चेन्द्रश्च मृत्युर्धावति पञ्चमः ।।

तै.उपलिषत्

भद्रं कर्णेभिः शृणुयाम देवाः। भद्रं पश्येमाक्षभिर्यजत्राः।
स्थिरैरङ्गैस्तुष्टुवाँसस्तनूभिः व्यशेम देवहितं यदायुः ॥

मण्डले १-सू -८७ मं-८

य आत्मदा बलदा यस्य विश्व उपासते प्रशिषं यस्य देवाः ।
यस्य च्छायाऽमृतं यो मृत्युमृत्युः कस्मै देवाय हविषा विधेम ॥

ऋ. १०-सू -१२१ मं-२

प्र नूनं ब्रह्मणस्पतिर्मन्त्रं वदत्युक्थम् ।
यस्मिन्निन्द्रो वरुणो मित्रो अर्यमा देवा ओकांसि चक्रिरे ॥

मण्डले १-सू -४० मं-५

अहमस्मि प्रथमजा ऋता३स्य पूर्वं देवेभ्यो अमृतस्य ना३भा इ ।
यो मा ददाति स इ देवमा३वाः । अहमन्नमन्नमदन्तमा३द्मि । अहं विश्वं भुवनमभ्यभवा३म् सुवर्न ज्योतीः । स ईं पाहि यऋजीषी तरुत्रः ॥

श्रियं लक्ष्मीमौपलामम्बिकां गां षष्ठीं च यां (जयां) इन्द्रसेनेत्युताहुः ।
तां विद्यां ब्रह्मयोनिं सरूपां तामिहायुषे शरणं प्रपद्ये ॥

हँसः शुचिषद् वसुरन्तरिक्षसद्धोता वेदिषदतिथिर्दुरोणसत् । नृषद् वरसदृतसद् व्योमसदब्जा गोजा ऋतजा अद्रिजा ऋतं बृहत् ॥

मण्डले ४-सू -४० मं-६

ऋचोऽक्षरे परमे व्योमन् यस्मिन् देवा अधि विश्वे निषेदुः । यस्तन्न वेद किमृचा करिष्यति य इत् तद् विदुस्त इमे समासते ॥

मण्डले १-सू -१६४ मं-३९

ओम् । भूर्लक्ष्मीर्भुवर्लक्ष्मीः सुवः कालकर्णी ।
तन्नो महालक्ष्मीः प्रचोदयात् ।

ओम् । नृसिंहाय विद्महे वज्रनखाय धीमहि तन्नः सिंहः प्रचोदयात् ।
तद्विष्णोः परमं पँदं सदा पश्यन्ति सूरयः । दिवीव चक्षुराततम् ।
तद् विप्रासो विपन्यवो जागृवाँसः यमिन्धते । विष्णोर्यत् परमृं पदम् ।

मण्डले १-सू -२२ मं-२

संस्तभ्य सिंहं स्वसुतान् गुणार्थान्
संयोज्य शृङ्गैर्ऋषभस्य हत्वा ।
वश्यां स्फुरन्तीमसतीं निपीड्य
संभक्ष्य सिंहेन स एष वीरः ॥

शृङ्गप्रोतान् पदा स्पृष्ट्वा हत्वा तामग्रसत् स्वयम् ।
नत्वा च बहुधा दृष्ट्वा नृसिंहः स्वयमुद्बभौ ॥

शृङ्गेष्वशृङ्गं संयोज्य सिंहं शृङ्गेषु योजयेत् ।
शृङ्गाभ्यां शृङ्गमाबध्य त्रयो देवा उपासते ॥

शृङ्गं शृङ्गार्धमाकृष्य शृङ्गेणानेन योजयेत् ।
शृङ्गमेनं परे शृङ्गे तमतेनापि योजयेत् ॥

ओतमोतेन जानीयादनुज्ञातारमान्तरम् ।
अनुज्ञामद्वयं लब्ध्वा उपद्रष्टारमाव्रजेत् ॥

नृसिंहानुष्टुभमन्त्रः —
ओम् । उग्रं वीरं महाविष्णुं ज्वलन्तं सर्वतोमुखम् ।
नृसिंहं भीषणं भद्रं मृत्युमृत्युं नमाम्यहम् ॥

ओं उं ओं, यो वै नृसिंहो देवो भगवान् यश्च ब्रह्मा तस्मै वै नमो नमः ॥ १

..............................................................

ओं हं ओं, यो वै नृसिंहो देवो भगवान् यश्च सर्वं तस्मै वै नमो नमः ॥ ३२

(குறிப்பு:- இந்த மந்த்ரங்கள் யாவற்றையும் ஆசார்யர் மூலமாய் ஸ்வரத்தோடு அத்யயனம் செய்து அநுஸந்தானம் பண்ணினால் விசேஷ பலங்களை அடையலாம். இங்கு ஸ்ரீந்ருஸிம்ஹதாபநீயோபநிஷத்தில் तस्मादिदं साम येन केनचिदाचार्यमुखेन यो जानीते स तेनैव शरीरेण संसारान्मुच्यते, मोचयति, मुमुक्षुर्भवति, जपात् तेनैव शरीरेण देवतादर्शनं करोति, तस्मादिदमेव मुख्यद्वारं कलौ, नान्येषां भवति என்று உள்ளதை கவனிக்கவும்)

தைத்தரீயோபநிஷத்தில் நாராயணவல்லியில் படிக்கப்பட்ட ஸ்ரீந்ருஸிம்ஹ மந்த்ரங்கள்:

सद्योजातं प्रपद्यामि सद्योजाताय वै नमः ।
भवे भवे नातिभवे भजस्व मां भवोद्भवाय नमः ।।

वामदेवाय नमो ज्येष्ठाय नमो रुद्राय नमः कालाय नमः कलविकरणाय नमो बलविकरणाय नमो बलप्रमथनाय नमस्सर्वभूतदमनाय नमो मनोन्मनाय नमः।।

अघोरेभ्योऽथ घोरेभ्यो घोरघोरतरेभ्यस्सर्वतश्शर्व सर्वेभ्यो नमस्ते अस्तु रुद्ररूपेभ्यः ।।

तत्पुरुषाय विद्महे महादेवाय धीमहि । तन्नो रुद्रः प्रचोदयात् ।

ईशानस्सर्वविद्यानामीश्वरस्सर्वभूतानां ब्रह्माधिपतिर्ब्रह्मणोऽधिपतिब्रह्मा शिवो मे अस्तु सदाशिवोम् ।

குறிப்பு:- ஸங்கல்பஸமயத்தில் எதையும் எதிர்ப்பார்க்காமல் கம்பத்தில் தோன்றியபடியால் ஸத்யோ ஜாதன் என்று ஸ்ரீந்ருஸிம்ஹனுக்குப் பெயர்.

समसमयसमुद्भवश्च भक्तगिरः । स्तम्भे च सम्भवस्ते ஸ்ரீகூரத்தாழ்வானின் சுலோகத்தை இங்கு அநுஸந்திப்பது.

அழகிய தெய்வமானபடியால் அழகிய சிங்கரை வாமதேவர் என்றது. அழகியான் தானே அரிவுருவந்தானே என்று ஆழ்வார் அருளிச்செயல். பொன் பெயரோனுக்கு கோரனாய் அச்சத்தை உண்டுபண்ணியபோதிலும் ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானுக்கு அகோரனானபடியால் அகோரன் என்றது.

ओं तत् सदिति निर्देशो ब्रह्मणस्त्रिविधः स्मृतः என்றபடியால் தத் என்ற சொல்லால் குறிப்பிடப்படும் புருஷோத்தமன் இவனே என்பதுபற்றி தத்புருஷன் என்றது.

ईशानो भूतभव्यस्य, उतामृतत्वस्येशानः என்றபடி யாவற்றிற்கும் ஈச்வரனானமை பற்றியும், सयोगो ज्ञानं तथा सांख्यं विद्याः शिल्पादि कर्म च । वेदाः शास्त्राणि विज्ञानं एतत् सर्वं जनार्दनात् என்றபடியாலும் எம்பெருமானே ஸர்வவித்யைகளுக்கும் தலைவனான ஸர்வவாகீச்வரன் ஆனது பற்றி ஈசானன் என்றது.

சேட்டலூர் வா. ஸ்ரீவத்ஸாங்காசார்யன்

## ॥ श्रीमन्त्रराजपदस्तोत्रम् ॥

( ஸ்ரீந்ருஸிம்ஹ மஹாமந்த்ரத்தை உள்ளிட்ட இந் மந்திரராஜபத ஸ்தோத்திரத்தினால் ஸ்ரீபரமேச்வரன், ஸ்ரீந்ருஸிம்ஹனைத் துதி செய்ததாக அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில் உள்ளது. இதைப் பாராயணம் செய்பவர்களுக்குக் கல்வியும், ஆயுளும், செல்வமும் வளரும்.

उग्रं वीरं महाविष्णुं ज्वलन्तं सर्वतोमुखम् ।
नृसिंहं भीषणं भद्रं मृत्युमृत्युं नमाम्यहम् ॥

वृत्तोत्फुल्ल-विशालाक्षं विपक्षक्षय-दीक्षितम् ।
निनादत्रस्तविश्वाण्डं विष्णुमुग्रं नमाम्यहम् ॥ १

सर्वैरवध्यतां प्राप्तं सबलौघं दितेः सुतम् ।
नखाग्रैः शकलीचक्रे यस्तं वीरं नमाम्यहम् ॥ २

पादावष्टब्धपातालं मूर्धाविष्ट-त्रिविष्टपम् ।
भुजप्रविष्टाष्टदिशं महाविष्णुं नमाम्यहम् ॥ ३

ज्योतींष्यर्केन्दु-नक्षत्र-ज्वलनादीन्यनुक्रमात् ।
ज्वलन्ति तेजसा यस्य तं ज्वलन्तं नमाम्यहम् ॥ ४

सर्वेन्द्रियैरपि विना सर्वं सर्वत्र सर्वदा ।
जानाति यो नमाम्याद्यं तमहं सर्वतोमुखम् ॥ ५

नरवत् सिंहवच्चैव रूपं यस्य महात्मनः ।
महासटं महादंष्ट्रं तं नृसिंहं नमाम्यहम् ॥ ६

यन्नामस्मरणात् भीताः भूतवेतालराक्षसाः ।
रोगाद्याश्च प्रणश्यन्ति भीषणं तं नमाम्यहम् ॥ ७

सर्वोऽपि यं समाश्रित्य सकलं भद्रमश्नुते ।
श्रिया च भद्रया जुष्टो यस्तं भद्रं नमाम्यहम् ॥ ८

साक्षात् स्वकाले संप्राप्तं मृत्युं शत्रुगणानपि ।
भक्तानां नाशयेद् यस्तु मृत्युमृत्युं नमाम्यहम् ॥ ९

नमस्कारात्मकं यस्मै विधायाऽऽत्मनिवेदनम् ।
त्यक्तदुःखोऽखिलान् कामान् अश्नुते तं नमाम्यहम् ॥

दासभूताः स्वतः सर्वे ह्यात्मानः परमात्मनः ।
अतोऽहमपि ते दास इति मत्वा नमाम्यहम् ॥ ११
शङ्करेणादरात् प्रोक्तं पदानां तत्त्वमुत्तमम् ।
त्रिसन्ध्यं यः पठेत् तस्य विद्याऽऽयुः श्रीश्च वर्धते ॥

## ஸ்ரீமந்த்ரராஜபதஸ்தோத்ரம்

உக்ரம் வீதம் மஹாவிஷ்ணும் ஜ்வலந்தம் ஸர்வதோமுகம் ।
ந்ருஸிம்ஹம் பீஷணம் பத்ரம் ம்ருத்யும்ருத்யும் நமாம்யஹம் ॥

வ்ருத்தோத்புல்லவிமாலாக்ஷம் விபக்ஷக்ஷயதீக்ஷிதம் ।
நிநாதத்ரஸ்தவிம்வாண்டம் விஷ்ணும் உக்ரம் நமாம்யஹம் ॥

ஸர்வைரவத்யதாம் ப்ராப்தம் ஸபலௌகம் திதே: ஸுதம் ।
நகாக்ரை: மகலீசக்ரே யஸ்தம் வீரம் நமாம்யஹம் ॥

பாதாவஷ்டப்த பாதாளம் மூர்த்தாவிஷ்ட திரிவிஷ்டபம் ।
புஜப்ரவிஷ்டாஷ்டதிமம் மஹாவிஷ்ணும் நமாம்யஹம் ॥

ஜ்யோதீம்ஷ்யர்க்கேந்து நக்ஷத்ர ஜ்வலநாதீந்யநுக்ரமாத் ।
ஜ்வலந்தி தேஜஸா யஸ்ய தம் ஜ்வலந்தம் நமாம்யஹம் ॥

ஸர்வேந்த்ரியைரபி விநா ஸர்வம் ஸர்வத்ர ஸர்வதா ।
ஜாநாதி யோ நமாம்யாத்யம் தமஹம் ஸர்வதோமுகம் ॥

நரவத் ஸிம்ஹவச்சைவ ரூபம் யஸ்ய மஹாத்மந: ।
மஹாஸடம் மஹாதம்ஷ்ட்ரம் தம் ந்ருஸிம்ஹம் நமாம்யஹம் ॥

யந்நாமஸ்மரணாத் பீதா: பூதவேதாளராக்ஷஸா: ।
ரோகாத்யாம்ச ப்ரணம்யந்தி பீஷணம் தம் நமாம்யஹம் ॥

ஸர்வோऽபி யம் ஸமாம்ரித்ய ஸகலம் பத்ரமம்நுதே ।
ம்ரியா ச பத்ரயா ஜுஷ்டோ யஸ்தம் பத்ரம் நமாம்யஹம் ॥

ஸாக்ஷாத் ஸ்வகாலே ஸம்ப்ராப்தம் ம்ருத்யும் மத்ருகணாநபி ।
பக்தாநாம் நாமயேத் யஸ்து ம்ருத்யும்ருத்யும் நமாம்யஹம் ॥

நமஸ்காராத்மகம் யஸ்மை விதாயாத்மநிவேதநம் ।
த்யக்ததுக்கோऽகிலாந் காமாந் அம்நுதே தம் நமாம்யஹம் ॥

தாஸபூதா: ஸ்வத: ஸர்வே ஹ்யாத்மாந: பரமாத்மந: ।
அதோऽஹமபி தே தாஸ: இதி மத்வா நமாம்யஹம் ॥

மங்கரேணாதராத் ப்ரோக்தம் பதாநாம் தத்த்வமுத்தமம் ।
த்ரிஸந்த்யம் ய: படேத் தஸ்ய வித்யாऽऽயு: ம்ரீம்ச வர்த்த்தே ॥

श्रीः

# ।। ऋणविमोचन नृसिंहस्तोत्रम् ।।

(கடன் தொல்லைகளால் கஷ்டப்படுபவர்கள் இந்த ஸ்தோத்ரத்தை பாராயணம் செய்தால் கடன் நீங்கி ஸுகமுண்டாகும்.)

देवताकार्यसिद्ध्यर्थं सभास्तम्भसमुद्भवम् ।
श्रीनृसिंहं महावीरं नमामि ऋणमुक्तये ।। १

लक्ष्म्यालिङ्गितवामाङ्गं भक्तानां वरदायकम् ।
श्रीनृसिंहं महावीरं नमामि ऋणमुक्तये ।। २

आंत्रमालाधरं शङ्खचक्राब्जायुधधारिणम् ।
श्रीनृसिंहं महावीरं नमामि ऋणमुक्तये ।। ३

स्मरणात्सर्वपापघ्नं कद्रूजविषनाशनम् ।
श्रीनृसिंहं महावीरं नमामि ऋणमुक्तये ।। ४

सिंहनादेन महता दिग्दन्तिभयनाशनम् ।
श्रीनृसिंहं महावीरं नमामि ऋणमुक्तये ।। ५

प्रह्लादवरदं श्रीशं दैत्येश्वरविदारणम् ।
श्रीनृसिंहं महावीरं नमामि ऋणमुक्तये ।। ६

क्रूरग्रहैः पीडितानां भक्तानामभयप्रदम् ।
श्रीनृसिंहं महावीरं नमामि ऋणमुक्तये ।। ७

वेदवेदान्तयज्ञेशं ब्रह्मरुद्रादिवन्दितम् ।
श्रीनृसिंहं महावीरं नमामि ऋणमुक्तये ।। ८

य इदं पठते नित्यं ऋणमोचनसंज्ञितम् ।
अनृणी जायते सद्यो धनं शीघ्रमवाप्नुयात् ।।

इति नृसिंहपुराणे ऋणविमोचन नृसिंहस्तोत्रं संपूर्णम्

# ருணவிமோசன ந்ருஸிம்ஹ ஸ்தோத்ரம்

தேவதாகார்ய ஸித்த்யர்த்தம் ஸபாஸ்தம்பஸமுத்பவம் ।
ஶ்ரீந்ருஸிம்ஹம் மஹாவீரம் நமாமி ருணமுக்தயே ॥ 1

லக்ஷ்ம்யாலிங்கிதவாமாங்கம் பக்தாநாம் வரதாயகம் ।
ஶ்ரீந்ருஸிம்ஹம் மஹாவீரம் நமாமி ருணமுக்தயே ॥ 2

ஆந்த்ரமாலாதரம் ஶங்கசக்ராப்ஜாயுததாரிணம் ।
ஶ்ரீந்ருஸிம்ஹம் மஹாவீரம் நமாமி ருணமுக்தயே ॥ 3

ஸ்மரணாத் ஸர்வபாபக்நம் கத்ரூஜவிஷநாஶநம் ।
ஶ்ரீந்ருஸிம்ஹம் மஹாவீரம் நமாமி ருணமுக்தயே ॥ 4

ஸிம்ஹநாதேந மஹதா திக்தந்திபயநாஶநம் ।
ஶ்ரீந்ருஸிம்ஹம் மஹாவீரம் நமாமி ருணமுக்தயே ॥ 5

ப்ரஹ்லாதவரதம் ஶ்ரீஶம் தைத்யேஶ்வரவிதாரணம் ।
ஶ்ரீந்ருஸிம்ஹம் மஹாவீரம் நமாமி ருணமுக்தயே ॥ 6

க்ரூரக்ரஹை: பீடிதாநாம் பக்தாநாமபயப்ரதம் ।
ஶ்ரீந்ருஸிம்ஹம் மஹாவீரம் நமாமி ருணமுக்தயே ॥ 7

வேதவேதாந்தயஜ்ஞேஶம் ப்ரஹ்மருத்ராதிவந்திதம் ।
ஶ்ரீந்ருஸிம்ஹம் மஹாவீரம் நமாமி ருணமுக்தயே ॥ 8

ய இதம் படதே நித்யம் ருணமோசநஸம்ஜ்ஞிதம் ।
அந்ருணீ ஜாயதே ஸத்யோ தநம் ஶீக்ரமவாப்நுயாத் ॥ 9

श्रीः

## ।।श्रीनृसिंहस्तुतिः ।।

(श्रीहरिभक्तिसुधोदये)

प्रह्लादः —

श्रीगोविन्द मुहुन्द केशव शिव श्रीवल्लभ श्रीनिधे
श्रीवैकुण्ठ सुकण्ठ कुण्ठितखल स्वामिन्नकुण्ठोदय ।
शुद्धध्येय विधूतधूर्त धवल श्रीमाधवाधोक्षज
श्रद्धाबद्ध विधेहि नस्त्वयि धियं धीरां धरित्रीधर ।। १

अच्युतगुणाच्युत कलेश सकलेश
श्रीधर धराधर विबुद्ध जनबद्ध ।
आवरणवारण विनील घनशील
श्रीकर गुणाकर सुभद्र बलभद्र ।। २

कर्णसुखवर्णन सुखार्णव मुरारे
सुवर्णरुचिराम्बर सुपर्णरथ विष्णो ।
अर्णवनिकेतन भवार्णवभयं नो
जीर्णय लसद्गुणगणार्णव नमस्ते ॥ ३

ஸ்ரீ:

## ஸ்ரீந்ருஸிம்ஹஸ்துதி:

(ஹரிபக்திஸுதோதயத்தில்)

ப்ரஹ்லாத: -

ஸ்ரீகோவிந்த முகுந்த கேஶவ ஶிவ ஸ்ரீவல்லப ஸ்ரீநிதே
ஸ்ரீவைகுண்ட ஸுகண்ட குண்டிதகல ஸ்வாமிந் அகுண்டோதய ।
ஶுத்தத்யேய விதூததூர்த்தவள ஸ்ரீமாதவாதோக்ஷஜ
ஶ்ரத்தாபத்த விதேஹி நஸ்த்வயி தியம் தீராம் தரித்ரீதர ॥

அச்யுத குணாச்யுத கலேஶ ஸகலேஶ
ஸ்ரீதர தராதர விபுத்த ஜனபுத்த ।
ஆவரணவாரண விநீல கனநீல
ஸ்ரீகரகுணாகர ஸுபத்ர பலபத்ர ॥

கர்ணஸுகவர்ணன ஸுகார்ணவ முராரே
ஸுவர்ணருசிராம்பர ஸுபர்ணரத விஷ்ணோ ।
அர்ணவநிகேதந பவார்ணவ பயம் நோ
ஜீர்ணய லஸத்குணகணார்ணவ நமஸ்தே ॥

## गद्यस्तुतिः

देवाः –

भक्तिमात्रप्रतीत नमस्ते नमस्ते अखिलमुनिजननिवह विहित सवनकदनकर खरचपलचरितभयद बलवदसुरपतिकृतविविधपरिभव भयचकित निजपदचलितनिखिलमखमुखविरहकृतशतरजलजभवमुख सकलसुरवरनिकरकारुण्याविष्कृतचण्डदिव्यनृसिंहावतार, स्फुरितोदग्र तारध्वनिभिन्नाम्बरतार, निजरणकरणरभसचलितरणदसुरगणपटुपटह विकट रवपरिगतचटुलभटरवरणितपरिभवकरधरणिधर कुलिशघट्टनोद्भूत

ध्वनिगम्भीरात्मगर्जितनिर्जितघनाघन, ऊर्जितविकटगर्जितसृष्टखलतर्जित, सद्गुणगणोर्जित, योगिजनार्जित, सर्वमलवर्जित, लक्ष्मीघनकुचतटनिकट— विलुण्ठनविलग्नकुङ्कुमपङ्कशङ्काकरारुणमणिकिरणानुरञ्जितविगतशशाकलङ्क शशाङ्कपूर्णमण्डलवृत्त स्थूलधवलमुक्तामणिविघट्टितदिव्यमहाहार, ललित दिव्यविहार, विहितदितिजप्रहार, लीलाकृतजगद्विहार, संसृतिदुःख समूहापहार, विहितदनुजापहार, युगान्तभुवनापहार, अशेषप्राणिगणविहित सुकृत दुष्कृत सुदीर्घदण्डभ्रामित बृहत्कालचक्र भ्रमणकृतिलब्धप्रारम्भ स्थावर जङ्गमात्मक सकलजगज्जालजलधारणसमर्थ ब्रह्माण्डनामधेय महापिठरकरणप्रवीणकुम्भकार, निरस्तसर्वविस्तार, निरस्तषड्भावविकार, विविधप्रकार, त्रिभुनप्रकार, अनिरूपितनिजाकार, नियतभिक्षादिलब्धगत रसपरिमितभोज्यमात्रसन्तोष, बलविजितमदमदननिद्रादिदोषजनघनस्नेह लोभादि दृढबन्धनच्छेद लब्धसौख्यसततकृतयोगाभ्यासनिर्मलान्तःकरण योगीन्द्रकृतसन्निधान, त्रिजगन्निधान, सकलप्रधान, मायापिधान, सुशुभाभिध ान, मदविकसदसुरभटमकुट वनानलनिभनयन, विलदसिकवचभुजघनवन लवननवरुधिराक्रमकल्पितमीनशङ्खत्तरङ्गशैवालमहजलूक दुस्तर पङ्कज निवहकलित महासुरपृतनाकमलनी विलोलनकेलिप्रिय मत्तवारण, दुष्टजनमारण, शिष्टजनतारण, नित्यसुख विचारण, सिद्धबलकारण, सुदुष्टासुरदारण, सदृशीकृताञ्जन, जनदोषभञ्जनघनचिन्निरञ्जन, निरन्तरकृतभक्तवाञ्छन, गतसर्ववाञ्छन, विश्वनाटकसूत्रधार, अंघ्रिध ूळिजातखसिन्धुधार, मध्वसृक्प्लुत चक्रधार, जनितकाम, विगतकाम, सुरजनकाम, उद्धृतक्षम, निश्चलजनसत्क्रियाक्षम, सुरनत चरण, धृत रथचरण, विविधसुरविहरण, विगतविकार, विकरण, विबुधजनचरण, सततप्रीत, त्रिगुणव्यतीत, प्रणतजनवत्सल, नमस्ते, नमस्ते ।।

## கத்யஸ்துதி:

தேவா:

பக்திமாத்ரப்ரதீத, நமஸ்தே நமஸ்தே அகிலமுனிஜன நிவஹ விஹிதஸவனகதனகர கரசபலசரிதபயத பலவதஸுரபதிக்ருத விவித

பரிபவபயசகித நிஜபதசலித நிகில மகமுக விரஹக்ருமாதர ஜலஜபவமுக ஸகல ஸுரவரநிகர காருண்யாவிஷ்க்ருத சண்ட திவ்ய ந்ருஸிம்ஹாவதார, ஸ்புரிதோதக்ர தாரத்வனிபின்னாம்பரதர, நிஜரணகரண ரபஸசலிதரண தஸுரகணபடுபடஹவிகடரவபரிகதசடுலபடரவரணிதபரிபவகர தரணிதரகுலிமகட்டனோத்பூதத்வனி கம்பீராத்மகர்ஜித நிர்ஜித கனாகன, ஊர்ஜிதவிகடகர்ஜிதஸ்ருஷ்டகலதர்ஜித,ஸத்குணகணோர்ஜித, யோகிஜநார்ஜித, ஸர்வமலவர்ஜித, லக்ஷ்மீகனகுசதடநிகட விலுண்டன விலக்னகுங்கும பங்கமங்னகாகராருணமணிகிரணானுரஞ்ஜித விகத மமாகலங்க மமாங்க பூர்ணமண்டலவ்ருத்த ஸதூலதவளமுக்தாமணி விகட்டித திவ்யமஹாஹார, லலிததிவ்யவிஹார, விஹிததிதிஜப்ரஹார, லீலாக்ருத ஜகத்விஹார, ஸம்ஸ்ருதிதுக்கஸமூஹாபஹார, விஹித தனுஜாபஹார, யுகாந்தபுவநாபஹார, அமோஷப்ராணிகணவிஹித ஸுக்ருத துஷ்க்ருத ஸுதீர்கதண்டப்ராமிதப்ருஹத்காலசக்ர ப்ரமண க்ருதிலப்த ப்ராரம்ப ஸ்தாவர ஜங்கமாத்மகஸகலஜகஜ்ஜால ஜலதாரண ஸமர்த்த ப்ரஹ்மாண்டநாமதேயமஹாபிடரகரணப்ரவீணகும்பகார, நிரஸ்தஸர்வ விஸ்தார, நிரஸ்தஷட்பாவவிகார, விவிதப்ரகார, த்ரிபுவனப்ரகார, அநிரூபித நிஜாகார, நியதபிக்ஷாதிலப்தகதரஸபரிமிதபோஜ்யமாத்ரஸந்தோஷ, பலவிஜிதமதமதனநித்ராதிதோஷஜனதனஸ்நேஹ லோபாதித்ருடபந்தனச் சேதலப்தஸௌக்ய ஸததக்ருத யோகாப்யாஸ நிர்மலாந்த:கரண யோகீந்த்ரக்ருத ஸந்நிதான, த்ரிஜகந்நிதான, ஸகலப்ரதான, மாயாபிதான, ஸுமரூபாபிதான, மதவிகஸதஸுரபடமகுடவனானலநிபநயன, விலதஸி கவசபுஜகனவனலவன நவருதிரக்ரமகல்பிதமீனசஞ்சத்தரங்கமைவால மஹாஜலூகதுஸ்தரபங்கஜலநிவஹகலித மஹாஸுரப்ரதனாகமலினீ விலோலனகேலிப்ரியமத்தவாரண, துஷ்டஜநமாரண, மிஷ்டஜநதாரண, நித்யஸுகவிசாரண, ஸித்தபலகாரண, ஸுதுஷ்டாஸுரதாரண, ஸத்ருமீ க்ருதாஞ்ஜன, ஜனதோஷபஞ்ஜன, கனசிந்நிரஞ்ஜன, நிரந்தரக்ருத பக்தவாஞ்சன, கதஸர்வவாஞ்சன, விம்வநாடகஸூத்ரதார, அங்க்ரிதூளி ஜாதகஸிந்துதார, மத்வஸ்ப்ருக்ப்லுதசக்ரதார, ஜனிதாகம, விகதகாம, ஸுரஜனகாம, உத்ருதக்ஷம, நிம்சலஜனஸத்க்ரியாக்ஷம, ஸுரநதசரண, த்ருதரத சரண, விவிதஸுரவிஹரண, விகதவிகார, விகரண, விபுதஜனமரண, ஸததப்ரீத, த்ரிகுணவ்யதீத, ப்ரணதஜனவத்ஸல, நமஸ்தே நமஸ்தே.

---

श्रीरामचन्द्रविरचितं

# ।। श्रीनृसिंह पञ्चामृत स्तोत्रम् ।।

(த்ரேதாயுகத்தில் பகவான் ஸ்ரீராமசந்திரன் வனவாஸகாலத்தில் ஸ்ரீ அஹோபில ந்ருஸிம்ஹனை இந்த ஸ்தோத்ரத்தினால் மங்களாஸாஸநம் செய்ததாக ஹரிவம்ஸபுராணம் சேஷதர்மத்தில் 47-வது அத்யாயத்தில் உள்ளது.)

अहोबिलं नारसिंहं गत्वा रामः प्रतापवान् ।
नमस्कृत्य श्रीनृसिंहं अस्तौषीत् कमलापतिम् ।।

गोविन्द केशव जनार्दन वासुदेव
विश्वेश विश्व मधुसूदन विश्वरूप ।
श्रीपद्मनाभ पुरुषोत्तम पुष्कराक्ष
नारायणाच्युत नृसिंह नमो नमस्ते ।। १

देवाः समस्ताः खलु योगिमुख्याः
गन्धर्व विद्याधर किन्नराश्च ।
यत्पादमूलं सततं नमन्ति
तं नारसिंहं शरणं गतोऽस्मि ।। २

वेदान् समस्तान् खलु शास्त्रगर्भान्
विद्यां बलं कीर्तिमतीं च लक्ष्मीम् ।
यस्य प्रसादात् पुरुषा लभन्ते
तं नारसिंहं शरणं गतोऽस्मि ।। ३

ब्रह्मा शिवस्त्वं पुरुषोत्तमश्च
नारायणोऽसौ मरुतां पतिश्च ।
चन्द्रार्क वाय्वग्नि मरुद्गणाश्च
त्वमेव तं त्वां सततं नतोऽस्मि ।। ४

स्वप्नेऽपि नित्यं जगतामशेषं
स्रष्टा च हन्ता रिपुरप्रमेयः ।
त्राता त्वमेकः त्रिविधो विभिन्नः
तं त्वां नृसिंहं सततं नतोऽस्मि ।। ५

इति स्तुत्वा रघुश्रेष्ठः पूजयामास तं हरिम् ।
पुष्पवृष्टिः पपाताशु तस्य देवस्य मूर्धनि ॥
राघवेण कृतं स्तोत्रं पञ्चामृतमनुत्तमम् ।
पठन्ति ये द्विजवराः तेषां स्वर्गस्तु शाश्वतः ॥

---

## ஸ்ரீந்ருஸிம்ஹ பஞ்சாம்ருத ஸ்தோத்ரம்

அஹோபிலம் நாரஸிம்ஹம் கத்வா ராம: ப்ரதாபவாந் ।
நமஸ்க்ருத்ய ஸ்ரீந்ருஸிம்ஹம் அஸ்தௌஷீத் கமலாபதிம் ॥

கோவிந்த கேஶவ ஜநார்தந வாஸுதேவ
விஶ்வேஶ விஶ்வ மதுஸூதந விஶ்வரூப ।
ஸ்ரீபத்மநாப புருஷோத்தம புஷ்கராக்ஷ
நாராயணாச்யுத ந்ருஸிம்ஹ நமோ நமஸ்தே ॥ 1

தேவா: ஸமஸ்தா: கலு யோகிமுக்யா:
கந்தர்வ வித்யாதர கிந்நராஶ்ச ।
யத்பாதமூலம் ஸததம் நமந்தி
தம் நாரஸிம்ஹம் ஶரணம் கதோऽஸ்மி ॥ 2

வேதாந் ஸமஸதாந் கலு ஶாஸ்த்ரகர்பாந்
வித்யாம் பலம் கீர்த்திமதீம் ச லக்ஷ்மீம் ।
யஸ்ய ப்ரஸாதாத் புருஷா லபந்தே
தம் நாரஸிம்ஹம் ஶரணம் கதோऽஸ்மி ॥ 3

ப்ரஹ்மா ஶிவஸ்த்வம் புருஷோத்தமஶ்ச
நாராயணோऽஸௌ மருதாம் பதிஶ்ச ।
சந்த்ரார்க வாய்வக்நி மருதகணாஶ்ச
த்வமேவ தம் த்வாம் ஸததம் நதோऽஸ்மி ॥ 4

ஸ்வப்நேऽபி நித்யம் ஜகதாமஶேஷம்
ஸ்ரஷ்டா ச ஹந்தா விபுரப்ரமேய: ।
த்ராதா த்வமேக: த்ரிவிதோ விபிந்ந:
தம் த்வாம் ந்ருஸிம்ஹம் ஸததம் நதோऽஸ்மி ॥ 5

இதி ஸ்துத்வா ரகுஶ்ரேஷ்ட: பூஜயாமாஸ தம் ஹரிம் ।
புஷ்பவ்ருஷ்டி: பபாதாஶு தஸ்ய தேவஸ்ய மூர்த்நி॥

ராகவேண க்ருதம் ஸ்தோத்ரம் பஞ்சாம்ருதமநுத்தமம் ।
படந்தி யே த்விஜவரா: தேஷாம் ஸ்வர்க்கஸ்து ஶாஶ்வதம் ॥

---

